[17th August 1960

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Sir, it is not correct to say that police protection is being given only to public meeting convened by the Congress Party. Such protection is being given to meetings organized by any political party provided such protection is found necessary.

SRI V. K. KOTHANDARAMAN: சமீப காலமாகவே காங்கிரஸ் கூட்டங்களைப் போடுவது என்றால், எதிர்க்கட்சிகளைத் தாக்குவதற்காக வேண்டியே, திட்டமிட்ட முறைப்படி, சில பிரமுகர்களை ஏற்பாடு செய்து, அவர்கள் திட்டக்கூடிய நேரத்தில், எதிர்க்கட்சியிலே உள்ளவர்கள் அதைக் கேட்கக் கூடாது, வாயைத் திறக்கக் கூடாது என்ற அளவுக்குப் போலீஸ் வான்கள் பாதுகாப்போடு அக் கூட்டங்கள் நடத்தப்படுகின்றன என்பது அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா? இரண்டு மாதங்களுக்கு முன்பு காட்பாடியில் 300 பேர்கூட இல்லாத கூட்டத்திலே, இரண்டு மூன்று பேர் அதைப்போன்று ரொம்ப மோசமான முறையில் தாக்கிப் பேசினார்கள். அந்தக் கூட்டம் மூன்று போலீஸ் ரிஸர்வ் வான்கள் பாதுகாப்போடு நடந்திருக்கிறது. இதைப்போன்ற சம்பவங்கள் பல இடங்களில் நடக்கின்றன. இது விஷயம் கனம் அமைச்சர் அவர்கள் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டிருக்கிறதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: எந்தக் கட்சியினர் கூட்டம் நடத்தினாலும் அது பாதுகாக்கப்பட வேண்டுமென்ற ஒரே நோக்கத்துடன்தான் போலீஸ் கவனம் செலுத்தி வருகிறது.

*Counterfeit currency notes*

* 225 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கள்ள ரூபாய் நோட்டுக்களையும், நாணயங்களையும் அச்சடித்ததிற்காக 1959, 1960-ம் வருஷங்களிலே எத்தனை கோஷ்டிகள் கண்டுபிடிக்கப்பட்டார்கள்?

(ஆ) என்னென்ன விதமான கள்ள ரூபாய் நோட்டுக்களையும், நாணயங்களையும் அவர்கள் அச்சடித்தார்கள் ?

(இ) இவர்களால் அச்சடிக்கப்பட்ட எத்தனை ரூபாய் மதிப்புள்ள நோட்டுக்களும், நாணயங்களும் ஜனங்களிடம் லேவாதேவியில் இருக்கின்றன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) Eight in 1959 and four in 1960.

(*b*) One-rupee, ten-rupee and hundred-rupee currency notes and 4 anna, 8 anna and one rupee coins.

(*c*) Information is not available.

17th August 1960]

SRI V. K. KOTHANDARAMAN: இந்தக் கேள்விக்குப் பதிலளிக்கும் நேரத்தில் எந்த மாதத்திய தகவலை அமைச்சர் அவர்கள் அளிக்கின்றார்கள்? 1960-வது வருஷம் என்றால், இந்த மாதம் வரையிலா அல்லது எந்த மாதம் வரையில் என்பதைச் சொல்ல முடியுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: எந்த மாதம் என்பதைப்பற்றி கனம் அங்கத்தினர் அவர்கள் கவலை கொள்ள வேண்டியதில்லை. ஏனென்றால், (c) என்னும் பகுதிக்கு "Information is not available" என்றுதான் பதில் சொல்லி யிருக்கிறேன்.

SRI V. SUBBIAH: கள்ள நோட் விஷயமாக கோவையில் ஒரு மில் அதிபர் கைது செய்யப்பட்டிருக்கிறார்களே......

MR. SPEAKER: அதுபற்றி கேட்கக் கூடாது. அது ஹை கோர்ட்டில் இருக்கிறது. ஆகையால் தயவு செய்து கோவை சமாசாரத்தைப்பற்றிக் கேட்காதீர்கள்.

SRI T. T. DANIEL: May I know whether these currency notes are under circulation through any of the prominent banks in our State?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: I do not know which kind of currency note the hon. Member is referring to.

SRI V. K. KOTHANDARAMAN: ஸார், கோர்ட்டிலே கேஸ் இருந்தாலும்கூட, பகிரங்கமாகப் பத்திரிகைகளிலே யார் யார் அரெஸ்ட் செய்யப்பட்டார்கள் என்று வந்திருக்கிறது. இது வரையில் வேறு யாரையாவது அரெஸ்ட் செய்யக்கூடிய அளவுக்குப் பெயரைச் சொல்லவில்லை என்றாலும், எத்தனை பேர்களை அரெஸ்ட் செய்ய உத்தேசம் உண்டு, அல்லது செய்யப் பட்டிருக்கிறார்கள் என்று சொல்ல முடியுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: போலீசார் நடவடிக்கை எடுத்ததுபற்றி, "எத்தனை பேர்கள்மீது நடவடிக்கை எடுக்க உத்தேசம்?" என்றால், அப்படி அல்ல போலீசார் நடவடிக்கை எடுத்துக்கொள்வது.

SRI K. VINAYAKAM: Has the Government any idea of the amount of counterfeit coins and notes that are now under circulation and in use in this State?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Government have no such idea. Now the whole matter is under investigation, as the hon. Member is aware of.

*Government servants*

* 226 Q.—SRI N. K. PALANISAMI: } Will the Hon. the
SRI K. R. NALLASIVAM: }

Minister for Finance be pleased to state whether there is any proposal to reconsider the orders already issued regarding the revision of working hours of Government offices and reduction of casual leave of the Government servants?

THE HON. SRI C. SUBRAMANIAM: No, Sir.